உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

காஞ்சீபுரம் ஸ்ரீசுந்தராம்பாள் சமேத

# ஸ்ரீகச்சபேசுரர்மாலை.

இது

காஞ்சீபுரம்

பச்சையப்பமுதலியார் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

ம-ா-ா-ஸ்ரீ தி. சு. வேலுசாமிப்பிள்ளையவர்கள்

முன்னிலையில்

---

ஷை காஞ்சீபுரம் பிள்ளையார்பாளயம் ம-ா-ா-ஸ்ரீ

மகாவித்வான் கந்தசாமிமுதலியார் மாணக்கரு ளொருவரான

வி. செங்கல்வராயமுதலியாரவர்களாற்

பார்வையிடப்பட்டு

---

ஷைபிள்ளையார்பாளயம்சாலைத்தெரு

க - கச்சாலை முருகப்பமுதலியார்

ஆ. வேதாசலமுதலியார்

இவர்களால்

---

காஞ்சீபுரம் ஸ்ரீகாஞ்சீபூஷண அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1911. [அணா1

உ

சிவமயம்

காஞ்சீபுரம்

பச்சையப்பமுதலியார் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

ம-ா-ா-ஸ்ரீ வெண்பாப்புலி

# தி. சு. வேலுசாமிப்பிள்ளையவர்கள்

இயற்றிய

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்தருங்கச்சித்திருநகரதனிற் றிகழ்கச்சபேசுரர்மாலை
யேர்தருமெழுதா வெழுத்தினிலிட்டே யெங்குமேபரவுறச்செய்தார்
கார்தரும்பொழிலக் கடிநகர்வாழ்வார் கச்சாலை முருகப்பச்செம்மல்
தேர்தரும்வேதாசலமெனுந்தோன்றல் செங்குந்தமரபுவந்தவரே.

# விளம்பரம்.

———:o:———

இப்புத்தகம் வேண்டியவர்கள் காஞ்சீபுரம் பிள்ளையார்பாளயம் அக்கணம்பாளயத் தெரு 50 - நெ. வீடு ஆ. வேதாசலமுதலியா ரிடத்திலும், ஷை பிள்ளையார்பாளயம் சாலைத்தெரு க. கச்சாலை முருகப்பமுதலியா ரிடத்திலும் அணா 1 கொடுத்து பெற்றுக்கொள்ளலாம்.



உ

சிவமயம்.



திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீகச்சபேசுரர்மாலை.

## காப்பு.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடல்விளிம்புடுத்த பார்மகளிதய கமலமாங்காஞ்சியம்பதியிற்
றிடம்பெறவாழு மழகம்மைபாகந் திகழ்கச்சபேசர்தாளிணையில்
வடம்புரைமாலைத் தொடைதொடுத்தணிய மகிழ்தருமைங்கரப்புத்தேள்
கடமழைபொழியு மஞ்சந்திவேழக் கணபதியிருசரண்காப்பாம்.

## நூல்.

சீருறுகடுக்கை கூவிளம்படலை திகழ்மதியணிசடாமகுடப்
பூரணப்பொருளே புண்ணியத்தெளிவே புங்கவரெண்ணிலார்பணியு
மாரணத்துறையே யழகம்மைபாக வடியனையாண்டருள்புரிவாய்
காரணிபொழில்சூழ்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (1)

# ஸ்ரீகச்சபேசுரர்மாலை.

சரணபங்கயமும் புலியதளுடையுந் தமனியவினியமுந்நூலுங்
கிரணசூரியனூ றாயிரங்கோடி கிளர்திரு மேனியினீறு
மருணமான்மழுவுந் திருமுகப்பொலிவு மடியனேன்காணவந்தருள்வாய்
கருணைசேரடியார் பயிறிருக்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (2)

திருமறுமார்பனேனமாய்க்கமலத் திசைமுகனன்னமாயின்னுந்
துருவியுங்காணாப் பதமலர்சேப்பத் தூதுசென்றனை நனியிரவில்
வரும்பெரும்பவனி கண்டுகண்களிக்க வாழ்வுதந்தருளுநா ளுளதோ
கருமுகிறவழு மணிமதிற்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (3)

கொட்டுடைத்தோளுஞ் சுமையடைதாங்குங் கூடையுங்கொண்டு தென்மது
பிட்டுவாணிபஞ்செய்செம்மனச்செல்வி பேருட்கிரங்கிமண்சுமந்து [ரைப்
கொட்டுமுன்வைகை கட்டுநின்பெருமை கூறரிதெனைப்புரந்தருள்வாய்
கட்டுபொன்மதில்விண் மட்டுயர்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (4)

மறைச்சிறுபால னருச்சனைக்குகந்து மறலியைப் படியினினெடுநாள்
கறைத்துளிவாயிற் பிலிற்றிடவுதைத்த காலனே சூலபாணியனே
யிறைப்பொழுதேனுநைந்துநைந்துருகா வேழையேற்கருட்கணோக்கருள்வாய்
கறைத்துடிநெடுங்கைக் கயம்பயில்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (5)

தண்ணறுத்துளப மாலிகைப்புயமால் சக்கரப்படைதனை வேண்டி
வண்ணவார்கமல மாயிரமெடுத்துன் மலரடிக்கிட்டொன் றுகுறையக்
கண்ணிடந்தப்பி யர்ச்சனைபுரியக் கசிந்தருள் சங்கரவெனையாள்
கண்ணிறைகவினூர் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (6)

புலியதளுடையு நாககங்கணமும் புனிற்றிளமதியணி சடையும்
பலிகவர்பிரம கபாலமார்கரமும் பசுங்கொடி யுமையவளிடமும்
வலிகெழுகடின முயலகன்வெரின்மேல் வைத்திடுபதமுமெற்கருள்வாய்
கலிகடலுலகிற் கயிலைநேர்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (7)

அந்தரத்தனுவை யறலிற்புற்புதத்தை யணிமுகிலிடைவருமினலைச்
சுந்தரவிழியி னிமைத்துணையளவுந் தொடர்பிலாவுடலை மெய்யெனவே
சந்ததமனந்த கற்பமுமிறவாத் தனுவினையறிவிலிக்கருள்வாய்
கந்தவேடவஞ்செய் திடவருள்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (8)

அருட்டிருவாரூ ரானைக்காதிருக்கா ளத்தியண்ணாமலை தில்லை
திருமுல்லைவாயின் மயிலைமாற்பேறு திருவொற்றியூர் திருப்பாசூர்
வருதிருவாமூ ரச்சிறுபாக்க மாகறலிலம்பயங் கோட்டூர்
கருதருங்காஞ்சி பெரிதெனவாழுங் கடவுளே கச்சபாலயனே. (9)

மதுரைசீர்காழி குடந்தையையாறு மறைவனம்வாழ்கொளிபுத்தூர்
சதிர்பெறுநாகை திருச்சிராப்பள்ளி சக்கரப்பள்ளிமாகாளந்
துதிபெறுவிருத்தா சலங்கழுக்குன்றந் தொண்டர்வாழ் கண்டியூர்கச்சூர்
கதிதருமிவையிற் சிறந்திடுங்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (10)

அடவியினுப்பண் ணைந்தழனடுவி லைம்புலனடக்கியோமென்னுந்
திடம்பெறுமனுவை யுச்சரித்தறிவைச் சிவத்தொடுங்கலந்துமெய்ஞ்ஞான
நடனகுஞ்சிதத்தாள் பணியுமெய்யடியார் நல்லடித்தொழும்புதந்தருள்வாய்
கடகரிக்குழுக்கள் பயிறிருக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (11)

சலந்தராசுர னுடலிருபிளவாய்த் தானறுத்திடுங்கொடுங்கடின
வலந்தருதிகிரிப் படையினைவேண்டி வாரிசமலர்களாயிரமும்
பலம்பெறவணியச் சக்கரங்கொடுத்த பரமநீயெனைப்புரந்தருள்வாய்
கலைவலோர்பயிலுங் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (12)

கடல்வயிறுளைந்து தருங்கொடுவிடத்தைக் களங்கரியுருவெனவாக்கு
மிடறினிலடக்கி மாலயன்முதலாம் விண்ணவர்தமையெலாங் காத்த
சுடர்மணிக்குன்றே மாசிலாமணியே துகளறுத்தாண்டருள்புரிவாய்
கடகரிமறுகு சூழ்திருக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (13)

மேருவோர்வில்லாய் வாசுகிநாணாய் விண்டுவை யம்பெனப்படைத்துக்
கூரியமுரலாற் புரமொருமூன்றைக் கொளுவிய கருணைவாரிதியே
நாரியோர்பாகா சச்சிதாநந்தா நாதவென்றனைப்புரந்தருள்வாய்
காரிருட்கூந்தன் மயில்பயில் காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (14)

சங்கினமருவு யிட்டசித்தீசத் தடத்தினிற் படிந்துமெய்முழுதுந்
துங்கவெண்ணீறு சாதனம்புனைந்து தொட்டிநீறுண்டபேர்தமக்கு
மங்கநோயனைத்து மிரவிமுன்பனிபோ லாக்குவை யெனைப்புரந்தருள்வாய்
கங்கைமாநதிசூழ் காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (15)

பரிபுரப்பதமும் வீரகிண்கிணியும் பாய்புலியதளுடை யிடையு
மரவகங்கணமு மான்மழுச்சூல வபயமாவரதவம்புயமு
மெரிவிழிநுதலுந் தவளவெண்ணீறு மேழையேன்காணவந்தருள்வாய்
கரியமாறவஞ்செய் திடவருள்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (16)

எண்ணில்பல்யோனிதொறுந்தொறுஞ்செனித்தே யிறந்திடும்பிணிதனைத்தவி
புண்ணியவடியாரடியிணைத்தொழும்பு புரியநீகருணைசெய்தருள்வாய்[ர்த்துப்
தண்ணிலாமுடிமே லிந்தனஞ்சுமக்குஞ் சதிரினைமறப்பனோ வடியேன்
கண்ணிலார்மணியே தவமருள்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (17)

சங்கரிநெடுநாள் கமடமாய்த்தவஞ்செய் காலையிற்சூலபாணியனாய்
துங்கவெள்விடைமே லழகம்மையுடனே தோன்றிவந் தவனுளமதனி
லிங்கிதம்பெறவே வேண்டியவரங்க ளினிதருள்சிறப்பரவருள்வாய்
கங்கைவேணியனே காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (18)

பஞ்சின்மெல்லடியும் வஞ்சிநுண்ணிடையும் பருவரைநிகர் முலைத்துணையு
மஞ்சனவிழியும் வண்டணிகரமு மலர்மதியனைய வானனமுங்
கொஞ்சியமொழியுங் கொண்டுளமுருகுங் கோதையர்க்காட்படா தருள்வாய்
கஞ்சன்மாறவஞ்செய் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (19)

அறுகினினுனியிற் பனியதுபோல வன்னைதன்னுதரத்திலுருவாய்ச்
சிறைபடவிருந்து மதியமோர்பத்துஞ் சென்றபின் சேயதாய்ப்பிறந்து
மறுவிலாதிருந்து வனிதையர்மோக வாரியிற் படிந்திடாதருள்வாய்
கறைமதியளவும் புரிசைசூழ்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (20)

முலைபிணைநெகிழ்த்துக் கலையவிழ்த்துடுத்தி முல்லைநேர்முறுவலைக்காட்டித்
தலைமயிர்தன்னைக் கோதியேமுடித்துச் சன்னைகள்பலபலகாட்டி
நிலைபெருந்தவத்தோ ருளந்தனைமருட்டு நெஞ்சினர் மயலொழித் தருள்வாய்
கலைவலோர்பயிலுங் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (21)

அடவியினிடத்தி லைந்தழனுப்ப ணைம்புலனொருவழி நிறுவித்
திடம்படமனத்தைச் சிவத்தொடுங்கூட்டிச் சின்மயானந்தமெய் வெளியில்
நடனவில்பாத தரிசனஞ்செய்ய நாயினேன் றனக்கருள்புரிவாய்
கடமுலைமடவார் நடனவில்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (22)

விண்ணினிலுடுவி லளவிலாச்சனன மேதினியிடத்தினிலெடுத்துப்
பண்ணினேர்மொழியாள் மோகவாள்வேடப் படுகுழியதனிடைவிழாம
றண்ணறுமலர்கொண் டுனதடிபணியத் தமியனையாண்டருள்புரிவாய்
கண்ணிலாயிரத்தோன் றவம்பயில்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (23)

திரிமருப்பெருமை பகட்டினிலேறிச் செங்கையிற்சூலமொன்றேந்தி
புரிமுருக்குடைய பாசமுங்கொண்டு பொள்ளெனவருமுனநினது
பெருமைசேர்விடைமே லுமையுடன்வந்துன் பேரருட்கருணைசெய்திடுவாய்
கருவிமாமுகில்க டவழ்மதிற்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (24)

இக்குவில்வளைத்து மலர்க்கணைதொடுத்தே யெழிற்றென்றற்றேரினி லேறி
மைக்குழன்மடவார் படையொடும்வந்தே வன்பினாலமர்செயுமதனை
மிக்கவெம்பொடியா யடலைசெய்விழியால் வினைகளின்றுரிசறுத்தருள்வாய்
கைக்கயமதியைத் தாவுசீர்க்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (25)

வரையினிற்குகையில் வந்திருந்தினிய வாயுவையருந்தியைம்புலனைக்
கரைபுரளாம லடக்கிமாதவஞ்செய் கவின்பெறுதவத்தினர்தமக்கும் [வாய்
உரைபெறக்கிடையாத் திருவடித்தொழும்பே யுதவியென் றனைப்புரந்தருள்
கரைபொருகம்பா நதிபெறுங்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (26)

செம்பொன்மால்வரையைச் சிலையெனப்பிடித்து செங்கண்மா லம்பெனப்ப
மும்பரும்வியப்பக் கருதலார்புரத்தை வொளிதருமூரலாலெரித்த [டைத்து
சம்புநின்பெருமை மறைகளுமெடுத்துச் சாற்றரிதெனைப்புரந்தருள்வாய்
கம்புலாம்வயல்சூழ் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (27)

சங்கராசிவனே தாணுவேயுமையாடன திடமன்னியமுதல்வா
மங்களாகரனே கங்கைவேணியனே மாசிலாத்தனிப்பெருமணியே
அங்கிவாழ்கரனே நீலகந்தரனே யானனமைந்துடையவனே
கங்குலும்பகலும் முழவருக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (28)

மயிலைமாநகரிற் குடத்திடுமென்பை மாநிலத்தவர்கள்கண்களிக்க
வயில்பொருவிழியு மதிநிகர்முகமு மம்புயக்கரமுஞ்சிற்றிடையும்
வெயில்விடுமுரலுங்கொங்கையும்படைத்தோர் மென்கொடியெனவரவளித்த
கயிலைநாயகனே காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (29)

தாருகாவனத்தி லிருடிகண்மமதை தன்னையேயடக்கிடவவர்கள்
பாரியர்கற்பைப் பாலசங்கமராய்ப் பலிக்குவந்திடக்கலைவளையை
சோரவேசெய்து கருணைசெய்தளித்த சூட்சியைமறப்பனோ வடியேன்
காரிமாதவஞ்செய் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (30)

மணிமுடிகனகக் கோளகைக்கப்பால் வயங்கிடுவெளியெலாமளப்பப்
புணியணியுபய பதமலர்வயங்கு பாதல மேழினுங்கடந்த
வணிபெறுஞானத் திருவுருப்பெருமை யாவராலுரைத்திடவெளிதாங்
கணிபெறுபொழில்சூழ் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (31)

படைத்திடுமனையைப் பசுவினைமகவைப் பாரினைப்பசிய செம்பொன்னை
நடைப்பெரும்பரியைக்கவுண்மதக்கரியை நகைமணித்தொகைமுதலெவையும்
உடைத்தனமென்று மதிப்பரோமதியா ருனதடித்தொழும்பையே நினைவார்
கடகரித்திரள்சூழ் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (32)

விரிஞ்சைமாநகரின் மறைச்சிறுவனுக்காய் வேதன்மாறேடியுங்காணா
அருப்பெருஞ்சடில முடியினைச்சாய்த்தே யர்ச்சனைசெயவருள்புரிந்தாய்
தெரிந்துனைப்பணியாவடியனேன் றனக்குன் றிருவடிபணியவென் றருள்வாய்
கருங்கயல்விழியார் நடநவில்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (33)

ஒருபுலியுரித்து மம்புலிதரித்து மொருபுலிக்கினியபாலளித்தும்
வரும்பெரும்புலியா யிருந்துமோர்மலைமான் மலரடிவணங்கினையதனால்
வரும்பசுவனைத்தும் பசுபதியென்றே வழுத்திடும்வள்ளலென் றனையாள்
கரும்பிளங்கமுகு சூழ்வளக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (34)

ஆணவத்திரியை மலச்சரக்கிரியை யைம்புலவேடர்வாழ்வனத்தை
வீணுரைநாவைப்படைத்தசட்டகத்தை வெறுத்துனைப்பணியவாழ்வருள்வாய்
தாணுவேசிவனே யிமையவெற்பரசி தழுவிடக்குழைந்ததற்பரனே
காணரும்பேறு தருந்திருக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (35)

சஞ்சலக்கடலின் மதிக்கலமழுத்தித் தாபரிப்பொன்றுமில்லாமல்
கொஞ்சமெல்லறிவாய் மயங்கிடுவோர்க்குன் குரைகழலம்பிதந்தருள்வாய்
வஞ்சிநுண்ணிடையா ளிமயவெற்பரசன் மகட்புணரினியகாதலனே
கஞ்சமென்றடஞ்சூழ் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (36)

அலைகடற்றுரும்பு போற்பலபிணியு ளழுந்துநெஞ்சகத்திடைமெலிந்து
நிலைபெறாததனு லுழன்றிடுவேற்கு னெறிவருமடியர்பாற்சேர்த்தே
அலைபெறுதிருக்கச் சந்ததநினதின் னருணிறைகடைக்கணோக்கருள்வாய்
கலைவலார்கழக நிறைந்திடுங்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (37)

காழிமாநகரிற் கவுணியச்சிறுவன் கண்பிசைந்தழுதிடவிரங்கி
மாழைசெய்வள்ளத் தினியபாலமுதை வளர்தனத்திடையினிற் கறந்து
தாழ்விலாதுதவி யருத்திமுத்தமிழைச் சாற்றிட வருளுமைபாகா
காழகிற்புகைகள் சூழ்திருக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (38)

நஞ்சினைமுன்னம் விண்ணவர்களின மாளிகையுறுபிரானுன
அஞ்சனவரைநேர் நெடியமான்முதலோ ரழிவுறாதருந்தியேகாத்த
மிஞ்சியகருணை வாரிதியெனது வினைத்துரிசறுத்தருள்புரிவாய்
கஞ்சகன்மலரின்வாவிசூழ்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (39)

சலந்தராசுரனுடலிருபிளவாய்த் தான்றுணிசக்கரப்படையைச்
சலசலோசனனுக்களித்தமெய்ப்பொருளே தமியனுக்கருட்கணோக்கருள்வாய்
தொலைவில்பன்மறையு மாகமத்திரளுந் தோத்திரஞ்செயுஞ்சிவக்கொழுந்தே
கலைவலார்துதிசெய் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (40)

எறுழ்வலித்தடக்கை மும்மதக்களிற்றை யீர்ந்துரிபோர்த்த சங்கரனே
முறுவலாற்புரமூன்றடலைசெய்தெரித்த முக்கணுமுதிர்தவக்கொழுந்தே
அறிவிலாவெனது வாணவச்சுரை யடலைசெய்தருட் கணோக்கருள்வாய்
கறுவுகொள்வேழக் குழுநிறைகாஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (41)

வம்பினைமுனிந்து புடைபரந்திறுகி வாரிசமுகையைப்படுத்திக்
கும்பநீரமிழ்த்திக்கோங்கினையலைத்துக்குஞ்சரக்கொம்பினையொடித்துச் வாழ்
செம்பொன்மால்வரையைச்சிவன்கையாற்குனித்ததிருமுலையழகம்மையிடம்
கம்புலாம்வயல்சூழ் காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே (42)

தந்தனைகாழிப்பந்தனைச்சூரைத் தடிந்தருள்கந்தனையளித்த
சுந்தரியிமயத்துரையருள்புதல்வி சுத்தவித்தையுங்கடந்தப்பால்
சந்திரகோடிநிகர்முகம்படைத்த தற்பரைபார்க்கவென்றனையாள்
கந்தடுகளிற்றின் பந்திசூழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (43)

பதுமபொற்பதமும் வல்லிநுண்ணிடையிற் பட்டுடைகட்டியவெழிலும்
மதுமலர்க்கரத்தில் வைத்தசொற்கிளியும் வரைதனையனையபூண்முலையும்
விதிமதிநுதலு மருணிறைவிழியும் விளங்குமின்பாகவந்தெனையாள்
கதுமெனவடியார் கனந்தருங்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (44)

பரவுசீரடியா ரிதயமேகயிலைப் பருப்பதமாகவீற்றிருக்குஞ்
சரணபங்கயனே தத்துவநீத சச்சிதானந்தமெய்ச்சுடரே
யரணமூன்றட்ட குறுநகைச்செவ்வா யற்புதச்சிற்பா வெனையாள்
கருணைசேரடியார் பயிறிருக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (45)

சூக்கும தூல தேகமாய்ப்பிறந்து சொற்போருணயனிலைதெரிந்து
வாக்கினிற்கொடிய வாசகமுரைத்து மாயையிற்படிந்துசஞ்சலமாய்
ஆக்கையாய்ச்சுமந்துவிண்படாநினதே ரடியிணைக்கன்புதந்தருள்வாய்
காக்குநாயகியாடவஞ்செயுங்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (46)

கோலமான்முன்னங்கோலமாப்பிறந்துன் குரைகழறேடியுங்காணக்
காலிணைநோவச் சுவற்றலைமீதிற் கவின்வளைசுமந்துதென்கூட
லாலவாய்தன்னில் விற்றனையடியே னவமதியகற்றியாண்டருள்வாய்
காலமூன்றுணர்ந்தோர்பயிறிருக்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (47)

முந்துநான்மறையு மாகமத்திரளு மொழிந்திடுஞ்சாத்திரமெவையும்
எந்தையென்றேயென்றோலமிட்டலறி யிரங்கினுங்காண்பருமுடிமேல்
இந்தனஞ்சுமந்தேயாலவாய்வீதி யிடந்தொறும்விற்றனையாள்வாய்
கந்தனைத்தந்த தந்தையேகாஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (48)

சடைமுடிமறைத்துமுடியினைத்தரித்துந் தமனியமணிபலவணிந்துங்
குடைநிழலிருந்துந் தனியரசியற்றிக் குறுநரிபரியதாய்ச்செய்த
நடனகுஞ்சிதனே சிவாகமத்தெளிவே நாயினேன்றனைப்புரந் தருள்வாய்
கடமுனிதவஞ்செய் காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (49)

அருவமாயுருவா யருவுருவாகி யகண்டபூரணவொளியாகிச்
சுருதியாறங்க மாகமமெவையுஞ் சொல்லுதற்கரியதற்பரமா [வாய்
யொருபெருமுதலாய்விளங்கியநினையானுவப்புறத்துதிக்கும்வாழ்வருள்
கருணைவாரிதியே காஞ்சியம்பதிவாழ் கடவுளே கச்சபாலயனே. (50)

அங்கைமான்மழுவு நெற்றியம்பகமு மரவகங்கணங்களுமறைத்தோர்
செங்கையிற்குடையும் சரிந்தகோவணமுந் திருநுதற்பூதிசாதனமும்
தங்கவோர்விருத்தபாலநற்குழவி தன்வடிவெடுத்தனைபுரந்தாள்
கங்குலும்பகலு முழவருக்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (51)

ஆலின்கீழிருந்துநால்வர்க்குமுன்னா ளரும்பொருளுரைத்தசங்கரனே
சீலசற்குருவே கருணைவாரிதியே சின்மயானந்தமெய்ச்சுடரே
வேலுறழ்விழியாள் பாகனேயடியேன் வினைத்துரிசறுத்தருள்புரிவாய்
காலனைக்காய்ந்த காலனேகாஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (52)

மருவளர்குருந்தி னடியினிலிருந்து மாணிக்கவாசகர்தமக்கு
விரிந்தவஞ்செழுத்தின் வண்மையையுரைத்த வித்தகசித்தசற்குருவே
அருந்தவமுனிவரமரர்விஞ்சையர்க ளடிபணிபவவெனையாள்வாய்
கருந்தடங்கண்ணார்நடனவில்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (53)

படியெலாமளந்தநெடியமாயவனும் பாய்விடைமீதினிலேறிக்
கொடியிடையுமையாளுடன்வருபவனி கொடியனேன்காணவந்தருள்வாய்
செடிவிடுத்தவளவெள்ளியங்கிரிவாழ் சின்மயானந்தமெய்ச்சுடரே
கடிமணநிலவும்வீதிசூழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (54)

தனிவழித்துணையேயொப்பிலாமணியே சச்சிதானந்தமெய்ச்சுடரே
பனிவரையளித்தபெண்கொடிபடரும் பண்பினாற்றுதிபெறுந்தருவே
யினியமாதவர்களுளத்தினில்விளங்கு மெண்ணிலாக்கருணைவாரிதியே
கனிசிவஞானமுனிவர்வாழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (55)

அரவசலல்குலரிவையரிடத்தி லன்பினைநீத்தவர்தமக்குப்
பரகதிகொடுக்கும்பரனெனவுன்னைப் பன்மறைபுரைத்திடுநீயு
மிரவினிற்றிருவாரூரினிற்பரவை யிடத்தினிற்றூதுசென்றனையாள்
கரவின்மெய்ஞ்ஞானபோதர்வாழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (56)

நாட்டினிற்குயவன்றிகிரிபோலுலகி னண்பிலாரிடத்தினிற்சென்று
பாட்டினையுரைத்துமுப்பத்திரண்டுபல்வினைவெள்ளெனக்காட்டித்
தாட்டிகனென்றேயுரைப்பினுமியார் தமதிடத்தணுகிடாதருள்வாய்
காட்டரும்பேற்றையருடிருக்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (57)

சங்கரியினியசங்கராவென்று தன்னுருவேனமாயெடுத்து
பங்கயப்பதத்தைத்தேடியுங்காணப் பரமனீயடியவர்தமக்குச்
செங்கையாமலகக்கனியெனநிறைந்த திருவுருக்காட்டுமற்புதனே
கங்கைகாளிந்திதவஞ்செயுங்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (58)

உவரிநீரனைத்துமங்கையிற்சிறிய வுளுந்தளவாகவேகொண்ட
தவத்துயர்குறியமுனிவனுக்காகச் சங்கரியுடன்விடைமீதிற்
பவத்துரிசகற்றித்திருமணக்கோலம் பரிந்துகாட்டினையெனப்புரந்தாள்
கவுத்துவநிறத்தோன்றவம்புரிகாஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (59)

புலிபதத்தினியவொருபெருமுனிவன் புதல்வனுமுபமன்னியற்கு
நலிபசியகலப்பாலவாரிதியை நல்கினையறிவிலேன்றனக்கு
மெலிபவப்பசிநோயகற்றியுன்பாத வீடுறத்திருக்கணோக்கருள்வாய்
கலிபிணியகற்றுங்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (60)

பொருப்புவில்லெடுத்துப்புரமொருமூன்றும்பொடிபடநகைத்தனையெழிலார்
கருப்புவின்மதனைநுதல்விழியதனாற் கனல்கொளச்செய்தனையெருமைப்
பொருப்பிலாநமனையுதைத்தனையெனையும் புரந்தருள்செய்யுநாளுளதோ
கருப்பமாயுலகைப்படைத்தருள்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (61)

முயலகன்முதுகிலொருபதமூன்றி முத்தலைச்சூலமொன்றேந்தி
வயவலியுழுவையதளினையுடுத்து மழுமறியங்கையிலேந்திச்
செயவிழியுமையாள்கண்டுகண்களிக்கத் திருநடம்புரிந்தனையெனையாள்
கயலினமுகளும்வாவிசூழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (62)

நவமணித்திரளுஞ்செம்பொனுமகிலு நரந்தமுநறுமலர்க்குவையும்
புவியினிற்றரங்கக்கரங்காளாற்கொணர்ந்து பூசைசெய்தொண்டரைமானச்
சிவனுறைபுனிதச்சினகரந்தோறுந் திப்பியபூசைசெய்பாலிக்
கவனவானதிசூழ்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (63)

பண்டொருவேடன்வாயினீராட்டிப் பறிதலைமுடியினிற்சூட்டித்
திண்பலசுவையுங்கண்டநல்லிறைச்சி தேக்கிலைக்கல்லையிற்படைத்தே
யண்டர்நாயகனேயென்றுரைத்தூட்ட வமுதுசெய்தனையெனப்புரப்பாய்
கண்டபேர்க்கிட்டவாழ்வருள்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே (64)

சராசரமனைத்துமளித்தகாமாட்சி தவஞ்செயக்கம்பையாறதனைப்
பராரைநீண்மரங்கள்வெற்பெலாங்களைந்து பகலின்மேலிகலியதேய்ப்பச்
சுராசுரர்நடுங்கவரவுமைதழுவு தொண்டுகொண்டருளினையெனையாள்
கராசலக்குழுக்கணிறைந்திடுங்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (65)

மின்னினேரிடையுமன்னமென்னடையும் விளங்கியமயிலினற்சாயல்
பொன்னனையாடனன்பினுக்கிரங்கிப் புண்ணியசித்தாய்வந்தே
மன்னியலோகம்பொன்னதாய்ச்செய்துன் வடிவுகண்டனையெனப்புரந்தாள்
கன்னிமாமதில்சூழ்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (66)

உடுத்துளியதனைமழைத்துளிநிரையை யுவரியிலெழுந்திடுமலையைக்
கடற்கரைமணலைத்தொகுப்பினுமடியேன் காசினியிடத்தினின்மெலிவா
யெடுத்தவிச்செனனமித்தனையென்றே யெண்ணிலாவினிப்புரந்தருள்வாய்
கடுத்தசொல்லறியாக்குணத்தர்வாழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (67)

நரியெனும்பொதிசோறதனையேசுமந்து நமதெனச்சந்ததமயங்கிப்
பரிவுகொண்டவமேநாடனைக்கழித்த பரிவிலேற்கருணனிபுரிவாய்
கரியுரிபோர்த்தேயரவரையசைத்துக் காளிமுன்னடித்தனையெனையாள்
கரியவன்றவஞ்செய்பெரும்புகழ்க்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (68)

முல்லைமல்லிகைமந்தாரைகோங்கிறகு முடித்தசெஞ்சடைமிசையொருத்தன்
கல்லலர்சாத்தவுவந்தனையென்றன் கவித்தொடைமாலையுமணிந்தாள்
வில்லினேர்நுதலாளுடன்மழவிடைமேல் விளங்கியவருட்பெருஞ்சுடரே
கல்லெனவேதவொலிநிறைகாஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (69)

அருணிறைகூடல்வழுதிதன்மகளா யவதரித்தரசுசெய்துலகில்
வருநிறைமுழுதுந்தனதுசெங்கோலின் வழிமுறைநிறுவியீசானப்
பெருந்திசையடுத்துத்திருமணமுடித்த பெண்ணிடப்பாகவென்றனையான்
கருணைசேரடியார்பயிறிருக்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (70)

புலிவலஞ்செய்யேன்புனிதநீர்படியேன் புண்ணியநாமமுச்சரியேன்
சிவனடியார்கட்சேவல்கள்செய்யேன் சிவகதைசெவியினில்வினவேன்
பவமிகப்புரியும்பண்பினேன்றனக்குன் பணிசெயவினிதருள்புரிவாய்
கவனவாம்புரவிதேர்நிறைகாஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (71)

கஞ்சனூர்சிரத்தையுகிரினாலரிந்தாய் காமனைக்கனல்விழியதனா
றஞ்சவேயெரித்தாய்புரமொருமூன்றுந் தூயபுன்மூரலான்முடித்தாய்
வஞ்சனேன்றனதுபவக்கொடுங்காட்டை வாட்டியாட்கொண்டருள்புரிவாய்
கஞ்சவாவிகள்சூழ்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே (72)

விருச்சிகமதியிலிரவிதன்வாரம் விடியுமுன்னெழுந்துதுல்லியமா
யருத்தியோடினியவிட்டசித்தீச வறறனிற்படிந்துசங்கரனைத்
திருத்தமாய்ப்பணிந்துமெய்வலம்வந்து தெரிசித்தோர்க்கினியவையளிக்குங்
கருத்தனேஞானவழகம்மையிடம்வாழ் கடவுளேகச்சபாலயனே. (73)

அழிவிலாப்பொருளே தனிச்சிவக்கொழுந்தே யன்பினரன்பினிற்பழுந்த
கொழுமதுக்கனியேகோதிலாக்கரும்பே குறைவிலாநிறைந்தவாரமுதே
தழுதழுத்துருகாவறிவிலேன் றனையுன் றாட்டுணைத்தொழும்புறப்பணிப்பாய்
கழிபெருந்தவத்தோர் தவம்புரிகாஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (74)

தந்தையுமின்றித்தாயருமின்றித் தனையர்மற்றொருவருமின்றித்
வந்தியாமந்தச்செம்மனச்செல்வி வாயலிற்கூலியாளாகி
முந்தவந்தணையும்பெருமையின்சிறப்பை மொழிவதற்கரிதெனைப்புரப்பாய்
கந்தமைந்தடங்குந்தவத்தர்வாழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (75)

அடிமுடிநடுவுமந்தமுமில்லா வாதியேவேதநாயகனே
துடியிடையுமையாள்பாகனேஞானச் சோதியேஞானதற்பரனே
வடுவகிரனையகண்ணியர்மோக வாரியிற்படிந்திடாதெனையாள்
கடிமணமோங்குங்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (76)

மலையெடுத்தவனும்வாரிசத்தவனு மற்றுளதேவருமெவரு
மலையெடுத்தெறியும்பாலவாரிதிமு னகடுலைந்தீன்றவன்னஞ்சை
நிலைபெறவயின்றகருணைவாரிதியே நெறியிலேன்றனையுமாண்டருள்வாய்
கலைபயில்புலவர்தவம்பயில்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (77)

ஆயிரங்கோடிபானுவோர்காலை யவதரித்தாலெனவிளங்குந்
தூயமால்விடைமேல்வரும்பெரும்பவனி சுருதியும்புகலுதற்கரிதா
நாயிலுங்கடையாஞ்சிறியனையுனது நாமமுச்சரித்திடவருள்வாய்
காய்கதிரனையமணிமதிற்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (78)

வண்டிருந்தரற்றுங்கொன்றைமாலிகையும் வதனமோரைந்துமான்மழுவுங்
கெண்டையங்கண்ணியுமையுடன்விடைமேற் கேசவன்சதுர்முகப்பிரம
னண்டருமபணியவரும்பெரும்பவனி யடியனேன்காணவுந்தருள்வாய்
கண்டுநேர்மொழியார்நடனவில்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (79)

தும்பைமாலிகையுஞ்செஞ்சடாடவியுந் துலங்குவெண்ணீறுவெண்டலையு
மம்பிகைபாகத்துடன்மழவிடைமே லனுதினம்வரும்பெரும்பவனி
நம்பிமுப்போதுந்தரிசனஞ்செய்ய நாயினேற்கருளுநாளுளதோ
கம்பைமாநதிசூழ்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (80)

ஐம்புலவேடர்செய்திடுங்குறும்பி லகப்படாதுளமொருமித்துச்
சம்புவேசிவனேதாணுவேநெடுமால் சதுர்முகன்றேடியுங்காணு
வம்பிகைபாகசச்சிதானந்த வண்ணலேயெனைப்புரந்தருள்வாய்
கம்புலாம்வயல்சூழ்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (81)

சுவர்த்தலையுழலும்பூனைபோல்யோனி தொறுந்தொறுமாசைவைத்துழலும்
பவத்துவக்குடையகொடியனேன்றனக்குன் பணிவிடைசெயவருள்புரிவாய்
நயததொகைப்பேதவடிவுகொண்டருளும் நற்றவக்கருணைவாரிதியே
கயத்துவாபரணன்றவம்புரிகாஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (82)

மண்முதலாயபூதமோரைந்து மதியுடனின்னியமான
னெண்முதலாயவட்டமூர்த்தமுமா யெள்ளுறுமெண்ணெய்போலெங்கும்
பண்புறநிறைந்தசின்மயானந்த பரமனேயெனைப்புரந்தருள்வாய்
கண்ணிநற்றவர்கடவுஞ்செயுங்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (83)

மதுத்துளிபிலிற்றுமலர்ப்பொழிலுடுத்த மதுரையம்பதியினில்வைகை
நதியினில்விடுத்தவேடெதிர்த்திடவும் நண்பிலாச்சமண்கழுவேற
விதியிலாதவர்க்கேயருள்சுரந்திடவும் வேண்டினேயெனைப்புரந்தருள்வாய்
கதிரயனிரதந்தவழ்பொழிற்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (84)

கிளிமொழிமடவாரிடத்தினில்வைத்த கேடிலாமோகவாரிதியில்
துளித்துணையுனதுதுணையடியதனிற் றோய்ந்திடவைத்திடிலவற்கே
யளியினமூசுங்கற்பகநாட்டிலரசருள் கருணைவாரிதியே
களிமதவேழப்பந்திசூழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (85)

எள்ளினிலெண்ணெ யெனவுலகிடத்தி லீறிலாவுயிர்த் தொகைதோறும்
உள்ளினும்புறமு நிறைந்தவைக்கெல்லா மூழ்வழியாவையுமளிக்கும்
வள்ளலென்றறிந்தும் வழுத்திடவறியா வறியனேயாண்டருள் புரிவாய்
கள்ளுலாங்கமல மலர்வயற்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (86)

சூதுநேர்முலையார் சூதினுமாழ்ந்த சூழலில் வீழ்ந்துனதடியில்
தாதுறுமலர்கொண்டொருபொழுதேனுந் தானருச்சனைபுரிந்தறியேன்
பூதலமதனிற்றிரிகளேபரமாம் பொறியிலிக்கருட்கணோக்கருள்வாய்
காதுவேற்கண்ணார் நடனவில்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (87)

ஆழிசூழுலக முழுதுவோர்குடைக்கீ ழரசுசெய் வாழ்வுவந்திடினும்
பீழைசெய்நரகக்குழியில்வீழ்ந்தாழப் பெறினுநின்னடித்தொழும்பியற்றும்
வாழ்வையேகருதிவாழ்வினைப்பெறுவர் வன்மனுக்கருட்கணோக்கருள்வாய்
காழகில்கமுகு சூழ்திருக்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (88)

விரித்தசெஞ்சடையு நுதல்விழிக்கனலும் வெண்டலைமாலை கோங்கிறகும்
சிரித்தபுன்மூரலும் தவளமுந்நூலுஞ் செங்கையிற்றங்குமான்மழுவும்
அருத்தியோடுன்னையுளத்தினினினைந்தே யர்ச்சனைபுரியும்வாழ்வருள்வாய்
கருத்தினினினைத்த வரமருள்காஞ்சிக் கடவுளே கச்சபாலயனே. (89)

வணப்பினின்மாரன்கொடையினிற்கர்ணன் வயதினிலினியமார்க்கண்டன்
றனத்தினிற்றனதன் கல்வியிற்சேடன் தயவினில்மனுகுலராமன்
சினத்தினைத்துமிந்ததருமனென்றீயாச் சிதடர்பாற்கவிசொலாதருள்வாய்
கனத்தினைப்படைத்த புரிசைசூழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (90)

மணலையுந்திரிப்பார்கனலிடைநடப்பார் மலையையோர்கையினிலெடுப்பார்
பணவரவதனையாட்டுவார்விடத்தைப் பருகுவார்சினப்புலிதடுப்பார்
மணமலிமலர்கொண்டுனதடிபணியா வறிவிலார்நட்பொழித்தெனையாள்
கண்முரசதிருமறுகுசூழ்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (91)

விழைவுறுகழையைப்பாகினைத்தேனை மிளிர்தருவமுதைமுக்கனியைக்
குழலினையாழைப்பழித்திடுமினிய கோதிலாத்தீஞ்சுவைமொழியா
ளழகம்மைபாகமழைமிகப்பொழிய வருள்சுரந்துனதருள்புரிவாய்
கழைகமுகனையவயனிறைகாஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (92)

அழிவிலாப்பொருளேபழமறைக்கொழுந்தே வாகமநிறைந்தவாழ்கடலே
ஒழிவிலாதுதவுமினியகற்பகமே யுயிர்தருமமுதசஞ்சீவி
விழியிலார்மணியேயழகம்மையிடம்வாழ் விமலனேயமலநாயகனே
கழிபெருஞ்செல்வந்தருந்திருக்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (93)

சண்டமாருதத்தினிடைப்படுமனுப்போற் சஞ்சலச்சூழலிற்றொடக்குண்
டண்டவோரிடமுமின்றியேதிரியு மறிவிலேற்காதரமருள்வாய்
பண்டையோர்சிறுவர்க்காய்முடிசாய்த்த பரமனேகைலைநாயகனே
கண்டுநேர்மொழியார்நடனவில்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (94)

ஈனரேயெனினுமடியவர்தமக்கே யிணக்கமொன்றறிந்திலரெனினும்
பானலம்விழியார்மோகவாள்வேடப் படுகுழிவிழுபவரெனினும்
ஞானநாயகவென்றுரைத்திடுமவர்க்கே நன்மைசேர்வீடருள்பவனே
கானயாழினர்களிசைபயில்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (95)

சந்தனத்தேய்வைகுங்குமமிளநீர் தயிலநெய்பாறயிர்தோயம்
மந்திரவிதியாலாட்டிமுப்போது மலரொடுபூசனைபுரிந்தே
இந்துசேகரனேபிறவிவேரறுக்கு மிறைவவென்றேத்தவாழ்வருள்வாய்
கந்தமைந்தடக்கித்தவம்புரிகாஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (96)

பஞ்சபாதகங்கள்செய்தபேரெனினும் பத்திமெய்வைத்திலர்கடின
நெஞ்சினரெனினும்பூதிசாதனத்தை நினைந்திடாவஞ்சகரெனினும்
அஞ்சலித்துன்றனடிமலர்பணிவார்க் கமருலகளிப்பையென்றனையாள்
கஞ்சன்மாறவஞ்செய்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (97)

புனிதநீர்படியேனறுமலர்கொய்துன் பொன்னடிதன்னிலே பணியேன்
தனியிருந்துனதுசரிதைநானுரையேன் சான்றவரிணக்கமுமறியேன்
வனிதையர்மோகவாரியிற்படிந்துமயங்குமென்றனைப்புரந்தருள்வாய்
கனிதருசோலைசூழ்திருக்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (98)

மட்டறுமலர்கொண்டுனதடியிணையில் வாஞ்சையுற்றர்ச்சனைபுரியுஞ்
சிட்டர்கள்பணியேபணியெனப்பணியத் திருவருட்கருணைசெய்திடுவாய்
யட்டமூர்த்தமுமாயெங்கணுநிறைந்த வற்புதாநந்தமெய்ப்பொருளே
கட்டளைப்படியேதவந்தருங்காஞ்சிக் கடவுளேகச்சபாலயனே. (99)

சைவசித்தாந்தநேசிகோத்தமனே சச்சிதானந்தமெய்ச்சுடரே
வைவருமொடுங்கிவாய்மொழிகுழறி யலமருகாலயில்விடைமேல்
மையுறும்விழியாளழகம்மையுடனே வந்தெனையஞ்சலென்றருள்வாய்
கைவலோர்தவஞ்செய்காஞ்சியம்பதிவாழ் கடவுளேகச்சபாலயனே. (100)

வரமருள்கச்சபேசுரர்தமது மாலையையெழுதிஞோர்படித்தோர்
திரம்பெறக்கேட்போமருச்சனைபுரிவோர் சிந்தையினினைப்பவர்புவியை
நிரந்தரம்புரப்பாராயுள்சேய்செல்வ நித்யகல்யாணராய்முடிவிற்
கரந்தைவார்சடிலக்கச்சபாலயர்தங் கழலிணைநிழலில்வாழ்குவரே. (101)

## ஸ்ரீகச்சபேசுரர்மாலை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

வேறு.

## நந்தவனமகிமைகூறியது.

—ooo—

நந்தவனத்திலீசன் நல்லுமைவிநாயகன்முர்
சுந்தராதித்தராதிக் கடவுளர்முனிவர்சித்தர்
யந்தமில்கணங்களாதி யானதேவதைகளெல்லா
மெந்நாளுஞ்சேர்ந்தங்கே யெளிதினிலிருந்துவாழ்வார்